கலைந்த
கார்குழலும்
கலங்கிய
விழிகளும்
சொல்லும்
என் காதலை
காற்றே-அவரிடம்
தூதாய்
எடுத்துச் செல்





நினைவிலும் நீ
கனவிலும் நீ
நீங்கினால் சுடுகின்றாய்
நெருங்கினால்
குளிர்கின்றாய்
அதிசய காதல் தீயே
எரிந்தும் தீயாத
உன் காதல் தீயில்
இதயமே நானடி

ஒரு விழியாள் நோய் தந்து
மறு விழியாள்
நோய் தணித்தாய்
வேல் விழியே
மையெழுதிய உன் விழிகள்
செய்யும்
காதல் மாயம்தான்
என்ன?



கண்டும் மகிழ்ந்தேன்
கனவிலும் மகிழ்ந்தேன்
நினைத்தும் மகிழ்ந்தேன்
காதலே
கள்ளிலும் போதையடி -
உன் நினைப்பு
மலரிலும் மென்மையடி
உன் உறவு

.





நினைக்கும்போதெல்லாம்
அமுதாய் இனிக்கும் உன்
உறவு
நீ மறந்தபோது மட்டும்
ஆலகால விஷமாய்
ஆனதடி







நெஞ்சில் நிறைந்தபோது
சொர்க்கம் தந்தாய்
நினைவில் விரிந்தபோது
கவிதைகள் தந்தாய்
உன்னைப் பிரிந்தபோது
ஏனடி கண்ணீர் தந்தாய்?







உன் நெற்றிப் பொட்டும்
நீள் விழிகளும்
என்னை
காதல் பித்தனாக்குதடி
உன் முத்துப் பற்களும்
மோகனச் சிரிப்பும்
நெஞ்சில் காதல் சுரத்தை
கூட்டுதடி




விழிகள் உண்டு
விழிகள் தழுவி
விழிகள் போதையுறும்
காதல் உலகில்
மொழிகள் சுவையிழக்கும்
விழிகள் பேசும்
காதல் மொழியில்
உயிரும் மெய்யும்
ஒன்றாய் கரையும





காதலே
உன் இதயவாசலில்
கோலமிட்டேன்
நீயோ காணவில்லை
உன் உதயவானில்
காதல்
பூபாளமிசைத்தேன்
கேட்கவில்லை
ஏனடி?





மும்தாஜே
என் முழு நிலவே
கண்பார்த்து
நெஞ்செழுதிய
அன்புக் காவியமே
என் சித்தம் நினைப்பு
செய்கை உள்ளவரை
என் இதயம்
உனை ஒருபோதும்
மறவாது






காலையில சூடி
மாலையில் வீசிட
என் காதல் என்ன
ஒரு நாளைக்குள்
வாடும் பூவா?






கையளவு
மனசுக்குள்
கடலளவு காதல்
வைத்தேன்
காதலே
ஏன் அதை
கண்ணீராய்
மாற்றினாய்?





விழிகளால்
மெய்யை தழுவி
மொழிகளால்
உயிரை திருடும்
காதல் திருடி
நீதானோ?







பார்தாள்- பார்த்தேன்
பருகினாள்-உருகினேன்
நினைத்தேன்
தும்மினாள்
நெஞ்சுக்குள் வந்தாள்

காதலாய்





பூ எதற்கு பூவையே-பூவாயிருக்க
நகை எதற்கு புன்னகையிருக்க
நறுமணம் எதற்கு-நேசமே
வாசமாய் மணக்க
தேன் எதற்கு-இதழ்கள் இருக்க
நான் எதற்கு
நானே நீயானபின்
என் சுவாசக்காற்றே
என் உயிர் உனதடி

விழிக்கதவு திறந்து
பார்த்தாய்
இதழ்கதவு திறந்து
புன்னகைத்தாய்
ஏனடி
இதயக்கதவை மட்டும்
இன்னமும் பூட்டி
வைத்திருக்கின்றாய்
வலிக்குதடி






பார்க்க தவித்து
பார்த்ததுவும்
பேசத் தவித்து பேசியதும்
காதலாகி கனிந்ததுவம்
நீ போனபின்
கனவாய் பழங்கதையாய்
ஆனதடி கண்ணம்மா
கண்ணில் கங்கை
பெருகுதடி









அன்பே
விண்ணில் உன் பெயரை
எழுதிவைத்தேன்
காற்று கலைத்ததடி
மண்ணில் உன் பெயரை
எழுதிவைத்தேன்
கடலலைகள் அழித்ததடி
என்றும் நிலைக்க
என் நெஞ்சில்
உன் பெயரை
எழுதிவைத்தேன்
ஏனடி
என் இதயத்தை
துடிக்கவைத்தாய்?

பால் நிலவோ
வான் வெளியில்
தேன் நிலவோ-
வெகு தொலைவில்
காதல் நெஞ்சோ
பாழ்வெளியில்
கண்ணீர்பூக்களோ
மனவெளியில்







விழிகளோ இவை
இல்லை-என்னை
விழுங்கிடும் காமன்
கயல்கள்?
செவ்விதழ்களா
இவை-
மலர்ந்த
முத்தப்பூக்களின்
புத்தம் புது தேன்
கிண்ணங்கள்?



ஒரு நாளில்
வாடும் பூவல்ல
நம் காதல்
வாடா மலராய்
எந்நாளும்
வாழ்ந்திருக்கும்
அழியா உறவடி
காதல்





உன் கன்னச்
சிவப்பினில்
நாணம்
வரைந்ததோ
காதல் ஓவியம்
உன் மோகனச்
சிரிப்பினில்
உள்ளம்
எழுதியதோ
காதல் காவியம்



இமைக்க மறந்தேன்
என் இமைகளே
திரையாகி
உன் அழகுருவை
மறைத்து விடுமோ
என்று

- விழிக்க மறந்தேன்
விழிப்பே தடையாகி
இனபக் கனவு
கலைந்துவிடுமோ என்று



உன்னை
மறப்பதென்பது
என் இறப்பு
உன் நினைவில்
வாழ்வதே என்
உயிர்துடிப்பு
அன்பே அறிவாய்



பூவென்று
உன்னை
நெஞ்சில்
சூடிவைத்தேன்
ஏனடி-
முள்ளாய்
மாறினாய்?



வஞ்சி மகளே
உன் நெஞ்சுக்குள்
நானில்லை
என்ற சோகம்
பூ நெஞ்சுக்கு
நஞ்சானதடி
என் நிம்மதியும்
பறிபோனதடி





நீருக்குள்
வாழும்
மீனாய்
என் இதயம்
உன்
நினைவுக்குள்
வாழுதடி





விண்ணெங்கும்
தேடினேன்
வெண்ணிலவே
உன்னைக்
காணவில்லை
மண்ணெங்கும்
தேடினேன்
தேன் மலரே உன்னைக்
காணவில்லை
கண்கலங்கி நெஞ்சம்
நொருங்கிட
என்னுள்ளே தேடினேன்-
காதலே
என்னுள் “நீயே”
“நானகி” நின்றாய்



உன் முத்துப்
பற்களும்
மோகனச் சிரிப்பும்
என்னை காதல்
பித்தனாக்குதடி
உன் தங்க குழலும்
வண்ணவிழிகளும்
காமன் கணையை
நெஞ்சில் சொருகுதடி





உன்னை மட்டும்
பிரம்மன்
ஏனடி
இத்துணை அழகாய்
படைத்து
காதல் வரமாய்
என்னிடம் தந்தான்.





விழிகளால் என்
நெஞ்சில் கவிதை
எழுதினாள்
மொழிகளால் -என்
செவிகளில்
காதல் தேனை
ஊற்றினாள்
புன்னகையால் என்
நெஞ்சுக்கு -காதல்
பூமாலை
சூட்டினாள்
வண்ணக்
கனவுகளால் என்
இரவுகளை
வசந்தமாக்கினாள்
யார் இந்த தேவதை

யாரிவள்
தேவதையா இல்லை
மோகினியா?
நீல விழிகளால்
நெஞ்சை
திருடியவள்
கான மொழியாள்
கவிதை பாடியவள்



வண்ணப்பூவே
என் எண்ணமெல்லாம்
நீயடி
வாசமலரே
என் காதல் தேசம்
உனதடி






உன் கண்பட்டதால்
புண்பட்ட
காதல் நெஞ்சம்
நாணப் புன்னகையால்
குணமான மாயம்தான்
என்ன
காதலா?





சக்கி முக்கி கற்களாய்
உரசிக்கொண்டன
விழிகள்
பற்றிக் கொண்ட
நெருப்பில்
சிக்கித் தவிக்குதடி
என் சின்ன இதயம்





உண்டு சுவைத்த மதுவிலும்
இனியது
மாது
இவளை கண்டு சுவைத்த
சுவை








அழியாத ஓவியமாய்
அன்புக் காவியமாய்
இன்றும் என்
நெஞ்சில்
நீயடி
தீராத சோகமாய்
ஆறாத காயமாய்
இன்றும்
உன் காதலடி






பூவாகி தேனாகி
மதுவாகி
பூத்தவளே
காதலாகி
காமத்துப்பாலாகி
இனித்தாள்



அழகே உன்னைக்
கண்டதும்
இமைக்க மறந்தன விழிகள்
துடிக்க மறந்தது இதயம்
கண்டதும் போதையுறும்
அழகே-நீயென்ன
என்னை ஆட்கொண்ட
காதல் புலமா
இல்லை
அதிசய காந்தப்புலமா?







நீயிருக்கும் வரை
நெஞ்சில் கவிதை
பூக்களடி
நீபோனபின்
விழிகளில் கண்ணீர்
பூக்களடி



கல்லில் பெய்த
மழைபோல் ஆனதடி
என் காதல்
முள்ளில் விழுந்த
பழந்துணியாய்
நோகுதடி நெஞ்சம்





கார்கூந்தல் பூச்சொல்லும்
கயல் விழிகளின் மை
சொல்லும்
இதழ்கள் ஊறும் தேன்
சொல்லும்
கண்ணாளா எனைப்
பிரியாதே
காதல் நோயுற்றேன்
உன்னால் என்று





நீள் விழிகளிலோ
காயாத ஈரம்
பூவிதயத்திலோ
இமயத்தை சுமக்கும் பாரம்
காதல் காயங்களால் ரணமான தேகம்
மனமோ
ஒற்றை குயிலாய் முகாரிபாடும் சோகம்



குயில்களாய் பாடி
மகிழ்ந்தும்
மயில்களாய் ஆடி
திரிந்ததும்
கிளிகளாய் பேசி
களித்ததும்
கனவாய் பழங்கதையாய்
போனதடி
நீ போனபின்
இதயத்திலோ ஆறாத
ரணம்
இமைகளிலோ வற்றாத
ஈரம்



ஒரு பூவாய் உதிர்ந்தேன்
நீ சூடிக்கொள்ளவில்லை
ஒரு பண்ணாய்
ஒலித்தேன்
நீ ஆடி மகிழவில்லை
ஒரு கவிதையாய்
விரிந்தேன்
நீ இரசிக்கவில்லை
கண்ணீராய் உதிர்ந்தேன்
ஏனடி கண்கலங்கினாய்







எத்தனை நேசமடி-உன்
மீது நான் வைத்திருந்தேன்
நெஞ்சம் பைத்தியமாய்
அலைய-நினைவோ
சோக சுனாமியில் அழிய
பித்தனானேன்
பைங்கிளியே
காதல் இத்துனை
கொடிதா?-கன்னியர்
நெஞ்சம் கருங்கல்லா?
வைரமா?



- நெஞ்சில் பூத்திருந்த
- காதல் பூவனமே காடாகிட
- நேசமழை பொழிந்த
- வான்மேகமோ வற்றிப்போயிட
- காற்றலையும் சருகானேன்
- கண்ணீர் ஊற்றெடுக்கும்
- காதல் பொய்கையானேன்.



